உ

ஓம்

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ சமிவனமென்னும் கோயிலூர் பரம்பரை
திருவண்ணாமலை ஈசானிய மடாலயம்
ஸ்ரீலஸ்ரீ, மகாதேவ ஞானதேசிகரவர்களின்
மாணவருள்ளொருவராகிய
செங்கந் தாலுக்கா மேலைப்புஞ்சை யென்னும்
மேலைமாநகர் மடாலயத்தில் பிர்ம்மநிஷ்டாபரராய்
எழுந்தருளியுள்ள
ஸ்ரீலஸ்ரீ இராமாநந்த மெய்ஞ்ஞானதேசிக
சுவாமிகளவர்களால் அருளிச்செய்த

# சொரூப விளக்க வினா விடை, கீர்த்தனைகள், கும்மிகள்.

இவை
ஷை சுவாமிகளின் பாதசேகரரிலொருவராகிய
மூலக்காடு-சண்டமாருதகோத்திரம்
போளூர் தாலுக்கா இரண்டேரிப்பட்டு நகர்
கணிதசோதிடம் மகாதேவ நாயனார் குமாரர்
சின்னக்கண்ணெனும் அருணாசல நாயனார்
அவர்களால் வெளியிடப்பட்டன.

இஃது
வேலூர் இலட்சுமி விலாஸ அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.
1937

உ

ஓம்

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ சமிவனமென்னும் கோயிலூர் பரம்பரை
திருவண்ணாமலை ஈசானிய மடாலயம்
ஸ்ரீலஸ்ரீ, மகாதேவ ஞானதேசிகரவர்களின்
மாணவருள்ளொருவராகிய
செங்கந் தாலுக்கா மேலப்புஞ்சை யென்னும்
மேலைமாநகர் மடாலயத்தில் பிர்ம்மநிஷ்டாபரராய்
எழுந்தருளியுள்ள
ஸ்ரீலஸ்ரீ இராமாநந்த மெய்ஞ்ஞானதேசிக
சுவாமிகளவர்களால் அருளிச்செய்த

# சொரூப விளக்க வினா விடை, கீர்த்தனைகள், கும்மிகள்.

இவை
ஷை சுவாமிகளின் பாதசேகரரிலொருவராகிய
மூலக்காடு-சண்டமாருத கோத்திரம்
போளூர் தாலுக்கா இரண்டேரிப்பட்டு நகர்
கணிதசோதிடம் மகாதேவ நாயனார் குமாரர்
சின்னக்கண்ணெனும் அருணாசல நாயனார்
அவர்களால் வெளியிடப்பட்டன.

இஃது
வேலூர் இலட்சுமி விலாஸ அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.
1937

உ

சிவமயம்.

# முகவுரை.

நமது பரதகண்டத்தின்கண் தொண்டநன்னாட்டினில் அறிவானந்தவடிவமாய் விளங்காநின்ற சீவன்முத்தர் எண்ணிறந்தோர் அவர்களில் ஒருவராகியும் திருவருணைக்கு மேற்றிசையில் விண்ணவனூ ரென்னும் க்ஷேத்திரத்தில் அவதரித்து அறிவானந்த வடிவமாய் துறவுபூண்டு அடுத்த மேலபுஞ்சைமாநகரத்தில் அடியார்களால் இயற்றிய மடாலயத்தில் குருமூர்த்தமாய் எழுந்தருளி இருப்பவருமாகிய ஸ்ரீலஸ்ரீ இராமாநந்த மெய்ஞ்ஞானதேசிக சுவாமிகள் அவர்களால் இயற்றிய சொரூப விளக்கவினவிடை கீர்த்தனைகள் கும்மிகளும் இத்துடன் ஷை குருநாதன்மீது அடியேனால் இயற்றிய இரட்டைமணிமாலை பதிகம் சரித்திரவசனமும் அறிந்தவளவில் வெளியிடலானேன்.

இங்ஙனம் அடியார்க்கடியன்,

 அருணாசலம்.

உ

ஓம்தத்சத்.

பரப்பிர்ம்மணே நம:

ஸ்ரீ அகண்ட பரிபூரண சச்சிதாநந்த சொருபராகிய உமாமஹேச்சுவரர் திருக்கோயில் கொண்டெழுந்தருளியுள்ள திருவருணைக்குமேல்பாகத்துள்ள திருவிண்ணநகரின்கண் மலைமன்னர் குலத்திலவதரித்தவரும் வெள்ளையப்ப வுடையாரென்னும் பெயருடைய பெரியாரொருவர் சென்னம்மை யென்னும் கற்புக்கரசியான இல்லக்கிழத்தியோடு இல்லறத்தில் மண்ணுலகதனில் மாண்புற ஒழுகி வருவராயினர் அங்ஙனம் நிகழுநாளில் அன்னவருக்கோரருமைப் புதல்வனின்றி ஆண்டவனைத் தொழுதருந்தவமியற்றி அவன் திருவருளாலோரருமைப் புதல்வனைப்பெற்று இராமாநந்தரென்னும் பிள்ளைத்திருநாமஞ்சூட்டி நாளொருமேனியும் பொழுதொருவண்ணமாய் வளர்த்துவருவராயினர் ஐந்தாம் ஆண்டில் தாய்தந்தையரால் நன்மங்கலத்துடன் பள்ளியிலமர்ந்து உபாத்தியாயரால் பயிற்றுவிக்கப்பெற்றக் கல்வியோடு முன்சென்மத்தின் நல்வினைப்பயனுல் கலைபலவு முணர்வராயினர் அஃதன்றி இவ்வுலகத்தோற்றம் அநித்தியமென்று கருதிநித்தியமாகிய இறைவனொருவன் உண்டெனத்தெளிந்து அவ்விறைவனையடையும் நெறியைப் போதிக்கும் சற்குரு எவ்வமையம் வாய்ப்பாரென்னும் ஏக்கமுடையவராய் ஈச்சுவரோபாசனை செய்யும்நிமித்தம் திருவருணையை வலம்வந்தும் திருக்கூட்டத்தோடுசாவி

வியும் வருவாராயினர் அங்ஙனம் இருக்குநாளில் தாய்தந்தையர் வற்புறுத்தலின் பொருட்டு உயர்குலத்தில் ஓர் நற்குண நற்செய்கைகளமைத்த கற்புக்கணிகலத்தை மணந்து இல்லறம்வழுவாதியற்றி வருவாராயினர் அங்ஙனம் இருப்பினும் உலகநெறியில் சால அருவருப்புத் தோன்றி திருவருணையம்பதியில் ஈசானியமடத்தில் நிருவிகற்பசமாதிகூடியிருக்கும் ஸ்ரீ சமிவனமென்னும் கோயிலூர்பரம்பரை ஸ்ரீ சிதம்பரஞானதேசிகரின் மாணவராய் விளங்கிய ஸ்ரீலஸ்ரீ மகாதேவஞானதேசிகர்பாலடைந்து நம்பிறவிநோய்நீக்கும் சற்குரு இவரே யென்றுளத்தில் நினைந்துபலநாள் தொண்டியற்ற அவரும் நன்மாணவரிவரெனமதித்து பாரம்பரைமுறையால் கட்டளைமுதலிய தத்துவபாடங்களை ஓதியருளியபின்நான்குவேதமுடிவின் மகாவாக்கியத்தையும் உபதேசிக்கப்பெற்று துறவாச்சிரமம்பெற்றுக்கோவணஉடையோடுபிறந்தநகரத்தின்புறத்தில் ஓர்மடாலயம் இயற்றித் தியானசமாதிகூடியிருந்தும் பசிப்பிணிக்காகப்பிட்சை பெற்றுண்டு அடியாருடன் கூடி ஆநந்தக்கடலில் மூழ்கினவராய் அடியார் விரும்பிய சந்தேகந்தெளிவித்துத் தத்துவ உபதேசம் செய்துவருவராயினர். அங்ஙனம் இருக்குநாளில் சேயாற்றின் தென்கரையிலுள்ள மேலைப்புஞ்சை நகரவாசிகளான அறிவிற்சிறந்த அன்பர்கள் சுவாமிகளின் ஞானற்புத மகிமையையுணர்ந்தவராய் இப்பெரியாரை நம்நகரத்தில் எழுந்தருளச்செய்து அவரது அருளைப்பெறவேண்டுவதல்லவோ நாம் செய்யுந்தவமெனக்கருதி சுவாமிகளைத் தம்மூருக்கு அழைத்துச்சென்று ஓர்மடாலயமியற்றி அதிலிருக்கச்

செய்து திருவடிபூசையும் மற்றைய திருப்பணிகளையும் செய்து தத்துவார்த்த பாடங்களைகேட்டு இருக்குநாளில் ஓர் கோபாலர் நமது சுவாமிகளுக்குப்பால் கொடுத்து வர ஓர்நாள் அவர் வேறொருவர் போதனையால் பால் கொடாமல் நிறுத்திவிட்டனர் பிறகு பால்கறக்க பாலி னின் றுதிரங்காண கோபாலர் பயந்து நமது சுவாமிகளி டம் முறையிட அதைக்கேட்ட சுவாமிகள் இதுயிறைவன் திருவருளென்றுரைத்து விபூதிகொடுத்தனுப்பினர் அக் கோபாலர் விபூதியை ஆட்டிற்குத்தூவி பால்கறக்கப் பால்சுரந்தது அதுமுதல் கோபாலர் பால்கொடுத்துவரு வராயினர் இத்தகைய ஞானவினோதச்செயல்கள் பல நிகழ்வதாயின. இந்நிகழ்ச்சிகளெல்லாம் உலகமறிந்து சுவாமிகளையடைந்து அவரதருளைப் பெற்றுய்வதாயிற்று அங்ஙனமிருக்குநாளில் காரப்பட்டு அண்ணாமலை நயினா ரென்பவர் தம்பத்தினியோடு சுவாமிகளை அடைந்து உபதேசிக்கப்பெற்று புதுப்பாளையத்துக்குப் போகும் வழியிற் கல்லாற்றின் தென்கரையிலுள்ள தம் சொந்த 2 ஏக்கர் நிலத்தில் சுவாமிகளின் பேரால் 2000 ரூபாயிக் குப் பெறுமான தார்சுகட்டட மொன்றியற்றித் தண் ணீர்ப்பந்தல் தருமம் சால அன்போடும் செய்துவருவரா யினர். இதுநிற்க சுவாமிகளின் கனிஷ்ட குமார்த்தி பார் வதி யென்னும் அம்மையாரும் உலகநெறியில் அருவருப் புத் தோன்றிச் சுவாமிகளையே அடைந்து பிர்மவித்தை யைஉபதேசிக்கப் பெற்றுத் துறவாச்சிரமத்தை அடைந் தனர் இதுநிற்க சுவாமிகளுக்கு வயோதிகத்தன்மையால் பரிபூரணதிசை எத்தருணம் நேர்ந்துவிடுமோ அத்தரு

ணம் சமாதிக்கட்டடம் கிரமமாகச்செய்யமுடியாதென்று அந்நகரவாசிகளாகிய அடியார்கள்கூடி சென்ற 1935ஆ க்கு நிகழும் யுவவருடத்திலேயே செல்வவிநாயகர் ஆலயத் துக்கும் திருமடத்திற்கும் கீழ்பாகத்தில் சமாதி கெற்ப கிரகம் ஸ்தூபி சுற்றுப்பிரகாரமும் இயற்றிவைத்தார் கள். இத்திருப்பணிக்கு அந்நகர மணியம் சின்னதம்பி உடையார், பெ. முத்துசாமி உடையார், அவர் குமாரர் இராமசாமி உடையார், அருணாசல உடையார் குமாரர் வேடியப்ப உடையார், சுப்பு நயினார் குமாரர் ஆறுமுக நயினார், வைசியகுல அப்பாயி செட்டியார், அரங்கசாமி செட்டியார், பாச்சல் கிராமம் மணியம் அப்பாயி நாயக் கர், விண்ணவனூர் பழவாத்தை உடையார், கடலாடி முத்துசாமி உடையார், கீழப்பாளூர் - த. முனிசாமிக் கவுண்டர் முதலிய அன்பர்கள் இத்திருப்பணிக்குத் தலை வராயிருந்துவருவராயினர். மேலைப்பாளூர் நடேசனென் னும் சாது சுவாமிகளின் அனுக்கிரகம் பெற்றுத் துறவு பூண்டு சுவாமிகளிடத்தேயிருந்து வருவராயினர் சுவாமி களின் பூர்ண கிருபாநோக்கம் பெற்றுய்ந்த அடியார் அனேகருள் மேலைப்புஞ்சைநகர் கிஷ்டசாமி சாதுவும் சதாசிவ சோதிடரும் மேலைப்பாளூர் பி. பழநி சோதிடர் மூதலியோராவார்.

பவுரிங்கப்பேட்டைத் தாலுக்கா கீழ்மசிகம் பள் ளக்குடிசை நகரில் மகிமையுற்றிருந்து பரிபூரணதிசை யாய் சுவாமிகளின் மாணவரெனக் கற்சமாதி கட்டிப்பல ராலும் பூசித்துவரும் அடியேன் தமையனார் ஸ்ரீ அண்ணு மலைச்சாது அவர்கட்குப்பின் சுவாமிகளின் நின்மல சர

ணும்புயத்தின் நீழலையடையும் பாக்கியத்தை விரும்பின வனுயினேன். சுவாமிகள் இத்தகைய அனுக்கிரக கருணு மூர்த்தியாய் இன்னும் அன்பர்கள்வேண்டிய வேண்டியவாறே உதவும் தன்மையராய் விளங்குகின்றனர். இத்தகைய அற்புத சற்குருநாதன் திருவடி வாழ்க வாழ்க வாழ்க. இச்சரிதம் யானறிந்தளவிலெழுதியதாம்.

திருச்சிற்றம்பலம்.

---

## சாத்துக்கவி.

ம-ள-ள-ஸ்ரீ வித்வான் வல்லம் வைத்தியலிங்கம் பிள்ளை, அவர்களாலியற்றிய

நேரிசை வெண்பா.

தற்சொருபங் காணத் தகவிழைவா ருக்கிரங்கி
நற்சொருப தீவ நயந்தளித்தான்—சிற்சொருபன்
ஆனவிரா மாநந்த னுமேலைப் புஞ்சையினன்
மான வினுவிடையாய் மன்.

ஓம் குருவே நமஃ

# சொரூப விளக்க வினு விடை.

சுயஞ் சோதியன்றி யொன்றுஞ் சோதித்துங் காணேன்
சுயஞ் சோதி தானே துணை.

அன்பர்களே ! நாமெல்லோரும் மோக்ஷ சாம்ராஜ்ஜியத்தை அவசியம் அடைதல்வேண்டும். அங்ஙனமின்றி பந்தத்தழுந்திக் கிடப்பமேல் பொற்கிண்ணத்தில் வைக்க யோக்கியமான பாலைக் கமரிலூற்றிப் பாழாக்கு தலைப்போல அனேக ஜன்ம புண்ணிய பரிபாகத்தால் கிடைத்த இவ்வருமையான மானிட சரீரம் வியர்த்தமேயாம்.

---

வினு : மோக்ஷமென்பது யாது ?

விடை : துக்கமெட்டுணையு மின்றி யானந்தமாயிருப்பதுவே மோக்ஷம்.

வினு : இதையெச் சாதனையினு லடையலாம் ?

விடை : விசாரஞானம் ஒன்றினுலேயே யடையத்தக்கதாம்.

வினு : இதற்குப் பிரமாணமுண்டோ ?

விடை : ஞானதேவரது கைவல்யம் என்னும் சுருதியே பிரமாணமாம்.

வினு : அங்ஙனமேல் விசாரஞானமாவது யாது ?

விடை : நான் யார் என்பதாதியாக விசாரித்து உண்மையறிதலாம்.

வினா: இந்த சரீரந்தானே நான் இதில் உண்மையறிய வேண்டியதென்னுளது?

விடை: இத்தூல சரீரம் பஞ்சபூத காரியமாய் சடமாயிருத்தலினாலும் எனதாடையென்பதுபோல எனது சரீரமெனப்பட்டு மமதைக்கு விஷயமாதலினாலும் நானாகமாட்டாது.

வினா: ஆனால் சுரோத்திராதி யிந்திரியங்களை நானென்னலாமே?

விடை: ஐந்திந்திரியங்களுள் ஒன்றாகிய நேத்திரேந்திரியத்தை விசாரித்துப் பார்ப்போம் அது விஷயங்களைச் சுயமே விளக்குமாற்றல் இன்றி சூரியாதி பிரகாசங்களை யபேக்ஷித்தலின் சடமாதலினாலும் அநுபவத்தில் என்கண்ணெனப்பட்டு மமதைக்கு விஷயமாதலினாலும் நானன்றாம் இங்ஙனமே பஞ்சேந்திரியங்களனைத்துமே நானாகமாட்டாது.

வினா: அப்படியானால் பிராணனை நானென்னலாமன்றோ?

விடை: காற்றே பிராணனெனப்பட்டுச் சடமாதலினாலும் என் பிராணனென்னுமனுபவத்தால் மமதைக்கு விஷயமாதலினாலும் நானாகமாட்டாது.

வினா: அங்ஙனமேல் மனதை நானென்னலாமே?

விடை : மனமானது கரணங்களு ளொன்ருய்ச் சட மாதலினுலும் எனது மனமென்னு மனுபவத்தால் மமதைக்கு விஷயமாதலினுலும் நானன்ரும்.

வினு : அப்போது அஞ்ஞானத்தையேனும் நானென்ன லாமா ?

விடை : அஞ்ஞானமும் சடமாதலினுலும் எனதஞ் ஞானமென மமதைக்கு விஷயமாதலினுலும் நானுக மாட்டாது.

வினு : இவையெல்லாம் நானல்லாவிடின் எல்லாம் ஒழிய நின்ற பாழோ நான் ?

விடை : பாழ் நானுகமாட்டாது இப்படி நானல்லவற் றையெல்லாம் நேதிசெய்து சேஷித்து நின்றபாழை யும் விளக்கிக்கொண்டு கேவலசாட்சி மாத்திரமா யிருக்கும் அறிவே நான்.

வினு : இத்தகைய அறிவின் சொரூபத்தைச் சுருக்க மாகச் சொல்ல விரும்புகின்றேன் ?

விடை : சத்தாய் சித்தாய் ஆனந்தமாயிருத்தலே அறி வின் சொரூபம்.

வினு : சத்தாவது என்னை ?

விடை : முக்காலத்து மிருப்பது சத்தாம்.

வினா : சித்தாவது என்னை ?

விடை : ஒன்றையு மபேக்ஷியாது எப்போதும் சுயம் பிரகாசமாயிருப்பதுவே சித்தாம்.

வினா : ஆனந்தமாவது என்னை ?

விடை : எப்போதுமுள்ள நிரதிசய சுகமே ஆனந்தமாம்.

வினா : இச்சச்சிதானந்த சொரூப தரிசனம் எப்போது கிடைக்கும்.

விடை : அசத்து சடதுக்க ரூப சகமாகிய கற்பித திரிசியங்களனைத்தும் தோற்றமின்றி நீங்கியவிடத்துக் கிடைக்கும்.

வினா : திருசியத்தோற்றமுள்ளபோதே திருக்கு சொரூப தரிசனந் தோற்றாதா ?

விடை : மனமானது சொரூபத்தினின்றும் வெளிமுகப்படுமேல் திரிசியத்தோற்றமாம். சொரூபத்து லயமாகில் சொரூபத் தோற்றமாம். ஆகவே திரிசிய தோற்றமுள்ளபோதே திருக்கு சொரூபந் தோற்ற மாட்டாது அன்றியும் திருக்குவினிடத்திலே யிச்சகமாகிய திரிசியமனைத்தும் பழுதையில் பாம்புபோல கற்பிதமாகத் தோற்றுகின்றது இதில் பாம்பின்

தோற்றம் நிவர்த்தியானாலன்றி அதிஷ்டான பழுதைத் தோன்றாததுபோல கற்பித திருசியத்தோற்றம் நிவர்த்தியானாலன்றி அதிஷ்டான திருக்குச் சொரூப தரிசனம் தோற்றாது.

வினா : அங்ஙனமேல் இச்சகமாகிய திரிசியத் தோற்றமெப்போதொழியும் ?

விடை : எல்லாவற்றிற்கும் காரணமாகிய மனம் எப்போது வாசனையோடு நசிக்கின்றதோ அப்போதொழியும்.

வினா : மனதின் சொரூபமென்ன ?

விடை : நினைவே மனதின் சொரூபம்.

வினா : வாசனையென்பதியாது ?

விடை : பூர்வானுபவங்களினா லுண்டானதாய் நினைவுகளுக்கெல்லாம் காரணமாய் மெழுகு உண்டையில் தங்க ரேணுக்களென்ன மனத்தில் பதிந்து கிடப்பதே வாசனையாம்.

வினா : இவற்றினீக்கமெங்ஙனமாம் ?

விடை : விசாரணை யொன்றினாலேயே நீக்கமாம்.

வினா : விசாரணை செய்வதெப்படி ?

விடை : மனம் ஏதேனும் ஓர் விஷயத்தைப்பற்றிச் செல்லின் அதிலுள்ள தோஷத்தை மனமாரக் காட்டித் திருப்புதலே விசாரணை பூர்வகமாக மனதை யடக்குதலாம்.

வினா : இங்ஙனம் விசாரபூர்வகமாக மனதைத் திருப்பினும் மீண்டும் அதே விஷயத்தைப்பற்றிச் செல்லுகின்றதே யென்செய்வது ?

விடை : பூர்வ வாசனைகளாலே முற்பழக்கங்களாலே செல்லத்தான்செய்யும். செல்லுந்தோறும் செல்லுந்தோறும் மீண்டு மீண்டு விசாரணைசெய்து தோஷதிருஷ்டிபூர்வகமாக, மனதைத் திருப்புதலை மறந்துவிடலாகாது. இப்படியே ஒவ்வொரு விஷயங்களினும் மனம் செல்லுந்தோறும் விடாமுயற்சியாக வாசனைகளடியோடு மாயும் பரியந்தம் விசாரணை செய்வதைக் கைவிடாதிருப்போமாகில் பிறகு மனம் விஷயங்களைப் பற்றிச் செல்லாது.

வினா : விஷயவாசனைகள் அளவிறந்தனவாய்க் கடலில் அலைகள்போல எண்ணங்கள் தோற்றிக்கொண்டேயிருக்கின்றனவே அவைகளெல்லாம் எந்தகாலத்தில் போகும்.

விடை: சொரூபத்தியானமும் விசாரஞானமும் திடப் படத்திடப்பட; வாசனை களெல்லாம் போனவிடந் தெரியாது போய்விடும்.

வினா: சொரூபத்தியான மாவதுயாது.

விடை: திருசியமனைத்துங்கற்பித மெனவிடுத்துச்சச்சி தானந்த சொரூபமேநானென்ன நிலைத்தலேயாம்.

வினா: சகலநினைவுகளையும் ஒடுக்கிநின்றதியானமும் ஓர் நினைவன்றோ அதன்நீக்கம் வேண்டுவதின்றோ.

விடை: எல்லாநினைவுகளையும் ஒழித்து நின்றதானும் இறுதியில் பிணஞ்சுடுதடியே யெனப்போய்விடும்.

வினா: இந்தமனோநாசத்திற்குவேறே இலகுவானவுபா யமில்லையா.

விடை: இந்த விசாரணையைத் தவிர தகுந்தவுபாயம் ஒன்றுமில்லை மற்றபிராணாயாமாதி யுபாயங்களால் மனதையடைக்கினும் அடங்கினாற் போலிருந்து மறுபடியும் கிளம்பிவிடும்.

வினா: இந்த விசாரணை எதுகாறும் வேண்டும்.

விடை: மனதின் கண்ணுள்ள வாசனைகளெல்லாமற்று சொரூப சாட்சாத்கார முண்டாகிற வரைக்கும் விசாரணைவேண்டும்.

வினா: எப்படிகஷ்டப்பட்டு முயற்சித்தாலும் தொன்று தொட்டு அனேகஜன்மங்களாக தொடர்ந்துவருகிற வாசனைகளனைத்தும் இதேஜன்மத்தில் நீங்கிசொரூப மாத்திரமா யிருக்கமுடியுமா?

விடை: ஒருவீரனனவன் எதிரிகளைச் சேதிப்பான் வேண்டி ஆயுதங்களோடு கோட்டையின்வாயிற்படியில் நின்று கோட்டையிலிருந்து எதிரிகள் வரவர வெட்டித்தொலைத்து இராஜ்ஜியத்தைக்கைக்கொள்வான்போல சொரூப சாட்சாத்காரமாகிய இராஜ்ஜியத்தையாள விரும்புவோன் விசாரணையாகிய வாளைக்கொண்டு சிறிதும் சோராது மனதினின்று கிளம்புகின்ற வாசனைகளொவ்வொன்றையும் சேதித்துக்கொண்டேவருவனேல் இதேஜன்மத்தில் பலஜன்மங்களில் செய்த வாசனைகளாம் எதிரிகளெல்லாம் ஒழிந்து சொரூப சாட்சாத்காரமாகிய ராஜ்ஜியத்தை யாளலாம் விசாரித்துப் பார்க்குமளவிலே வாசனையற்றமனமே நமது சொரூபமாம் இதற்கு ஒன்றும் பயப்படவேண்டியதில்லை மற்றே இது நம்மால்முடியுமா? முடியாதா? என்கிற சந்தேகநினைவிற்கு மிடங்கொடாமல் சிட்டுக்குருவியானது இதுமுடியும் முடியாது என்கிற எண்ணமுமின்றி சமுத்திரத்தை யிறைக்க முயன்றதுபோல குரு சாஸ்திரங்களால் கேட்கப்பட்ட சொரூபத் தியானத்தையும் விசார ஞானத்தையும் இடைவிடாது பெருமுயற்சியோடு செய்து கிருதகிருத்தியனாதல் வேண்டும்.

வினு: கிருதகிருத்தியனென்ப தென்னே?

விடை: செய்யவேண்டிய தெல்லாம் செய்து முடித்த வன் கிருதகிருத்தியனும்.

வினு: அப்படியானல் சொரூப சாட்சாத்காரத்திற்குப் பிறகு செய்யவேண்டிய தொன்றுமின்ருே?

விடை: ஆம். மேலும் அவன் செய்யவேண்டியது மொன்றுமில்லை அவனடையவேண்டியதுமொன்று மில்லை அவனறியவேண்டியதுமொன்றுமில்லையென் றுய்த்துணரவேண்டும்.

வினு: இப்படி விசாரித்துணரும் இச்சொரூபத்தினும் கடவுள் வேருே?

விடை: இந்த சொரூபமே கடவுள், சொரூபமே சீவர்கள், சொரூபமேஜகமனைத்தும். இந்தசொரூபத்தின் வேருக திரணமுமில்லை. இத்தகைய சொரூபத்தைத் தானுக சாட்சாத்கரித்தவர்களேயே மஹான்களென்றும், மோன நிலையினரென்றும், பகவத் பத்தரென்றும், பிராமணர்களென்றும், சீவன்முக்தர்களென்றும் பலவிதமாகச் சொல்லப்படும். அன்பர்கள் இந்த சொரூப சாட்சாத்காரத்தை நாமும் எப்படியாவது அடைந்துவிடலாம் என்னும் எண்ணத்தோடுதான் அனேக ஜன்ம புண்ணிய பரிபக்குவத்தால் இம்மானிட சரீரத்தைத் தாங்கப்பெற்

ளூம். இப்போது நினைத்து வந்தது ஒன்றும், செய்வது ஒன்றுமாய் ஏமாந்து விடப்போகாது இப்படி பெருங்கஷ்டப்பட்டுச் சம்பாதித்த இவ் வரிய மானிட சரீரத்தை வியர்த்தமாக்கிவிடாமல் எப்படியாவது கையோடு கைநெரித்துக் கொண் டாவது, பல்லோடு பல் கடித்துக்கொண்டாவது கஷ்டப்பட்டு நம்மை சச்சிதானந்த சொரூபமாகத் தெளிந்து சாட்சாத்கரித்தல் வேண்டும். சுபம்.

சொரூப விளக்க வினு விடை முற்றிற்று.



உ

சிவமயம்.

சீராரு ஞானச் சிரத்தையினுற் கீர்த்தனங்கள்
பாராரும் பைந்தமிழாற் பாடவே—பேராரும்
சித்தி விநாயகவென் சிந்தையினில் வந்துதவிப்
பத்தியுற வித்ததிகண் பார்.

## சித்திவிஞயகர் கீர்த்தனை.

காம்போதி ராகம்.] [ஆதி தாளம்.

பல்லவி.

மேலைபுஞ்சை யெனுமாநகரிற் கொலு
வீற்றிருக்குங் கணநாதா—எனைக்
காத்தருளுங் குணபோதா (மேலை)

### அனுபல்லவி.

மூலாதாரத்துமுக் கோணந்தனைநாடி
வாலை குண்டலிசத்தி வல்லபையுடன்கூடி (மேலே)

### சரணம்

சங்குசின்னங்கள்பூரி சகலவாத்தியங்களும்
சன்னிதிக்கெதிராக தாம்தாமென்றொலித்திட
மங்களமாமறை யோர்புகழ்ந்தேத்திட
மாதவத்தோர்களும் வாழ்த்தித் துதித்திட
வகையொடுதும்புரு நாரதர்கீதம்பாட
அகமகிழ்ந்தரம்பையர் அபிநயமுடனாட (மேலே)

அந்தரதுந்துமி அதிர்ந்து முழக்கஞ்செய்ய
அரியயனமரர்கள் அன்புடன்பணிசெய்ய
பந்தியாயடியவர் பாங்காய் பஜனைசெய்ய
பாவலர்காவியம்பாடித் துதிகள்செய்ய
பவளமணையசிர மீதினிற்பொன்முடி
தவளவெண்பொடிமிக தாங்கியதிருவடி (மேலே)

கடலையவல் பொரியும் காராமணிப்பயறும்
கற்கண்டு சர்க்கரையும் கரும்பிளநீருடன்
வடதோசைபாயச மதிரசம்போளியும்
வாழையுடன்பலா மாமதுரக்கனியும்
அகமகிழ்ந்தனுதினம் அன்பர்படைக்கவே
சுகமுடனமுதுகொள் சுந்தரமூர்த்தியே (மேலே)

தத்துவமசிமகா வாக்கியத்தின்பொருளை
சற்குருகாட்டிய தன்மையுணர்ந்துமிக
அத்துவிதாநந்த மாகியநிலையினில்
அடியனி ராமாநந்த னனுதினமிருந்திட
வந்தனமிதுசமயந் தனிலன்புடன்
வந்தருள்செய்திடும் சுந்தரசுமுகஜம் (மேலை)

---

கல்யாணி இராகம்.] [ஆதி தாளம்.

பல்லவி.

கண்டால்வரச் சொல்லுங்கள்—காரணகுருவை
கண்டால்வரச் சோல்லுங்கள் (கண்)

அனுபல்லவி.

தொண்டர்களேநீங்கள் சோராமல் தயைசெய்து
மண்டலந்தனிலெந்தன் மாதேவசுவாமியை (கண்)

சரணம்.

சின்னவயதினிற் றெரியாதநாளையில்
கன்னம்வைத்தெந்தனை கலந்துமருவிப்போனர்
இன்னும்வரக்காணேன் ஏதுநான்செய்குவேன்
ஏழைபடுந்துயரம் பாவிமேல்தயைசெய்து (கண்)
பாயும்புலியதன்முன் மானின்கன்றதுபோல
மாயப்பெரும்படைக்கி யாளாக்கிவிட்டாரே
சேயனல்முடியாது ஏதுக்குவாதென்மீது
சீக்கிரம்வந்தெனை கார்க்கவே தயைசெய்து (கண்)

சாதுசங்கத்தினோரே சற்குருபாதம்போற்றி
வேதமுழுதுணர்ந்த மூதறிவோரேநீங்கள்
சூதானவுலகத்தில் பேதையைகாட்டிவைத்து
ஏதுக்குபோனாரோ இன்னம்வரக்காணேனே (கண்)

அன்னை தந்தையரானார் அறியாதவயதினில்
பின்னால்சற்குருவாகப் போதித்துப்போனாரே
என்னாலினிமுடியா திச்சகந்தனைவெல்ல
ஏழையிராமாநந்த சேயன்மேற் றயைசெய்து (கண்)

---

இதுவுமது.

பல்லவி.

வேளையிதுசமயம் சற்குருநாதா (வேளை)

அனுபல்லவி.

வாலமெஞ்ஞானியர்க் குகந்தமாதேவநீ
பாலனைரக்ஷிக்கப்பார முனக்கன்றே (வேளை)

சரணம்.

அன்னை தந்தைகுரு வுன்னையல்லால் வேறு
ஆருந்துணைகாணேன் வேறொருதிக்கில்லை
பன்னுமறைவேத கீதமடங்கலும்
பகுத்துச்சொல்வது வேறுபரமில்லையுனைவிட (வேளை)

பாரினில்வேறெனக்காருந் துணையிலையே
பாவிப்படுந்துயரம் பார்த்துரட்சிக்கொணுதோ
தாரணிதனிலெந்தன் கோரபாவத்தைப்போக்கி
தற்காத்துரட்சிக்க தருணமிதுவே நல்ல (வேளை)

அறியாதநாளையிற் சிறியேன்முகம்பார்த்து
ஆவியுடற்பொருளடைக் கலமாய்பெற்றுச்
சரியானமாவாக்ய மதுநீ யென்றருள்செய்து
தடுத்தாட்கொண்டது போலதயவுடனெனைக்காக்க ()

காலைமாலையிலெந்த வேளையிலுமுன்னை
கருதாமல்விருதாவில் காலம்போக்கினேனே
பாலன்ராமாநந் தன்பசிதீர பாலூட்டி
பரமாநந்தப் பரிபூரணபதந்தர (வேளை)

---

தன்யாசி இராகம் சங்கராபரணம் ரூபகதாளம்

பல்லவி.

மோசம்போகாதே நீ நெஞ்சே நாசமாகாதே (மோ)

அனுபல்லவி.

பாசபந்தமெனும் பாழும் வாழ்வைநம்பி (மோ)

சரணம்.

அஷ்டயிஸ்வரியமிருக்குதென்றெண்ணி நீ
ஆணவங்கொள்ளாதே—நாளை

கஷ்டமும் நஷ்டமும் குஷ்டமும் வரும்போது
கடைத்தேருவதேது காசினியின்மீது (மோ)

ஆடுமாடு மெத்தைவீடு நமதென்று
ஆசையைவையாதே—நாளைக்
கேடுவரும் போதந்தப் பொருளெலாம்
கிட்டிவந்துதவி செய்யாதது நிசமினி (மோ)

பஜனைபாடுவதிற் பலனொன்று மில்லையென்று
பதுங்கியோடித்திரியாதே—நாளை
நிசமதாகச் சிவனருள் கிடைத்திடுமென்று
நிச்சியமாகச்சொன்னேன் பட்சமுடன்கொள்வீர்
(மோ)

பத்தர்முத்தர் மனம்நடுங்கிடப் பேசிநீ
பழியைசுமந்து கொள்ளாதே—நாளை
பித்தம்பிடித்துநீ கத்தும்போதென் செய்வாய்
பேசுராமாநந்தத் தேசிகனிது சொன்னேன். (மோ)

---

கமாஸ் இராகம் ஆதிதாளம்

பல்லவி.

வீணாய்காலங்கழித்தாயே ஐயையோ நெஞ்சே (வீணா)

அனுபல்லவி.

தோணாது தோற்றுவிக்குந் துரியநிலையைக்கண்டு
நாணாமலதனிற் கண்ணாட்டம் வைத்திருக்காமல் (வீ)

சரணம்.

கண்ணுங்கருத்துடனே காரணகுருவைநற்
காலங்கண்டடைந்தவர் கழலிணைபோற்றியே
வண்ணவருளைப்பெற்று வாழ்ந்திருந்திடவெண்ணி
வந்தக்காலினைவிட்டு பந்தக்காலினைதொட்டு (வீ)

சஞ்சிதக்கட்டறுத்துச் சாராதாகாம்யங்கெட்டு
மிஞ்சும் பிரார்த்துவவினையு மறுத்தொழிக்கும்
குஞ்சிதபாதங்கண்டு கோடித்திரிந்திடாமல்
வஞ்சியராசையென்னும் நஞ்சனுதினமுண்டு (வீ)

வாஸ்தவ்யமான குருமலரடி பணிந்தவர்
வாக்கின்படி நில்லாமல் சாக்குப்போக்குகள்கொ
நாஸ்திகருடன்கூடி நாளைக்கழித்தாலினி [ண்டு
நமன்வருவானென்று இமைப்பொழுதுந் தேராமல்

நீர்மேல்குமிழிபோல் நிலையில்லா வாழ்வென்றும்
நேற்றிருந்தாரின்று நீராகிவிட்டாரென்றும்
பார்த்திருந்தும் பிள்ளைபரிகாசமீதென்றே
பாமரனாகியே பாரிலுழன்று நீ (வீ)

இந்திய சேட்டைகளைப் புந்தியிலடக்காமல்
ஏகாந்தமாய் சிதாகாசத்தை பாராமற்
தந்திரமாய்குரு—சாதனையோராமல்
சாதுராமானந்த தேசிகனாகாமல் (வீ)

சாவேரி இராகம் ஆதிதாளம்.

### பல்லவி.

அத்வைதா நந்தம்பாரு ஓமனமே
சுத்தபிர்மத்தைச்சேரு (அத்)

### அனுபல்லவி.

அத்வைதா நந்தம்பாரு சுத்தபிர்மத்தைச்சேரு
பத்தியாய் சாதுக்கள் பரமசுகமடைந்த (அத்)

### சரணம்.

பெண்டுபிள்ளைகளென்னும் பெருஞ்சந்தைகூட்டத்
பேயனைப்போலவே நாய்போலுழன்றுநீ [தில்
அண்டியபொருள்களை ஆவலுடனே சேர்த்து
அந்தகன்போலவே பந்தத்திலழுந்தாமல் (அத்)

காணிநமதென்று சாணிபுழுவைப்போல
கண்டதுகாட்சி யென்றென்று மகிழ்ந்துநீ
தானியக்களஞ்சியம் தனம்பொருள்யாவையும்
தாவியலைந்துமே தவித்துநீ மாளாமல் (அத்)

காரினினீர்க்குமிழ் நாரியர்மோகத்திற்
கலங்கிவிழுந்துநீ பலங்களைப்போக்கியே
சாரமில்லாவுடல் தளர்ந்துமண்விழுமுன்னே
தற்பராநந்தசிற் சொரூபத்தினிற் சேர்க்கும் (அத்)

குண்டுணிபோலவே கண்டதெல்லாம் பேசி
மண்டலமேன் மதங்கொண்டு பாவத்தைச்சேர்க்கும்
வண்டருறவைமதியாமலெப்போதும்
தொண்டனிராமாநந்தன் சொல்வதைகேட்டுநீ(அத்

---

தன்யாசி இராகம்.] [அடைதாளம்.

பல்லவி.

என்னேரமுமனம் சஞ்சலப்படுமல்லால்
இனியொன்று மறியேனே (என்)

அனுபல்லவி.

மண்ணாசை பெண்ணாசை பொன்னாசையாற்சிக்கி
மயங்கிதியங்கியே மாண்டுபோவதுங்கண்டு (என்)

சரணம்.

அன்னைவயற்றினிற் சென்மித்தநாள்முதல்
ஆசைகயிற்றினிலாடும் பம்பரமாகி
எண்ணுதெல்லா மெண்ணி குண்ணியதனுல்மன
மெரிந்து விரிந்துநிலை பிரிந்தினி வாடாமல் (என்)
வாலவயதினில் மங்கையர் மோகத்தில்
கோலமுடனேசிக்கி மாலையினிதங்கூடி
ஆலகாலவிஷம்போலத் தலைக்கேறி
ஆவியொடுங்கி நடுங்கி முடங்கியே (என்)
உன்னிதபாட்டுகள் ஆட்டங்கள் கூட்டங்கள்
ஒழுங்குநடைகளிலும் தியங்கியனுதினமும்
தன்னையறியாமல் தலைவனைக்காணுமல்
பன்னுஞ்சதுர்வேதம் படிக்காமலனுதினம் (என்)

சாதுசங்கஞ்செய்து சஞ்சலந்தீராமல்
சத்துமசத்தறிந்து சாதனையோராமல்
போதநிலையைக்கண்டு பொருந்திநீ வாழாமல்
புனிதராமாநந்தன் புகல்வதைக்கேளாமல் (என்)

---

தேசிகதோடி இராகம்.] [ஆதி தாளம்.

பல்லவி.

என்னசெய்யுமோயினி யேதுசெயுமோசதி
யேதுமறிந்திடாமல்போதுபோக்கினேன்விதி (என்

அனுபல்லவி.

கன்னியராசையிற் கலங்கிடச்செயுமோ
கருதுமெய்ஞ்ஞானமே பெருகிடச்செயுமோ (என்)

சரணம்.

பன்னும்பவக்கடலில் படிந்திடச்செயுமோ
பாவாதீதந்தனிற் பற்றுறச்செயுமோ
இன்னல் தருமாணவத் தெய்துறச்செயுமோ
ஏகாந்தவொளியினி லேத்திடச்செயுமோ (என்)
சூதான உலகாசை தோய்ந்திடச்செயுமோ
தூயவர்களைக்கண்டு சுகம்பெறச்செயுமோ
பாதகரேகும்வழி பற்றிடச்செயுமோ
பத்தியாயடியரைப் பண்புறச்செயுமோ (என்)
ஐம்புலகாட்டினி லலைந்திடச்செயுமோ
அமலக்குரவனடி யடைந்திடச்செயுமோ
மெய்மைதுரியமெனும் வீட்டினைக்கண்டதில்
மேவியிராமாநந்தன் சேவிக்கச்செயுமோ. (என்)

இராகம் சங்கராபரணம்.] [ரூபக தாளம்.

பல்லவி.

இன்னந்தயவில்லையா யெனைரட்சிக்க (இன்)

அனுபல்லவி.

மன்னும்சதுர்வேத கீதத்தின் முடிவினில்
தன்னந்தனிப்பொருளாகிய சோதியே (இன்)

சரணம்.

கள்ளப்பாஷாண்டிகள் கருத்திடும்வஞ்சகர்
மெள்ளப்பொருள் வவ்வும் வேசியரையும்விட்டு
உள்ளநன்னிலையதா யுறும்பரமாநந்தம்
வெள்ளமதனில்மூழ்கி விளங்கவேசெய்திட (இன்)

சமயவாதிகள்செய்யும் தர்க்கசாஸ்திரங்களும்
சாதிபேதமென்னும் சமுசயந்தனைவிட்டு
எமையாளும் சற்குரு இருபதம்போற்றியே
இன்னலை தவிர்த்துமே நன்னிலையினிற்சேர்க்க (இன்)

மதிமோசம் களவுவஞ்சனை சூதுடன்பொல்லா
வாதுகள்செய்துட்ட வாதனைகளைவிட்டு
கதிவிலக்காமந்தகாரம தனைப்போக்கி
கதிரொளி போல்ராமாநந்தன் கண்காணவே. (இன்)

---

இராகம் நாதநாமக்கிரியை. ரூபக தாளம்.

பல்லவி.

சுத்தபிர்ம்மாநந்தமே ஓம்சிதாகாசச்
சோதிசொரூபாநந்தமே (சுத்)

அனுபல்லவி.

சுத்தபிர்ம்மாநந்த சுகாதீதத்துமோன
அத்வைதரகசிய வாநந்தமோனமே (சுத்)

சரணம்.

முற்றிலுமுனேநாடினேன் ஒம்சைதன்ய
மூர்த்தியே யெனையாள்வாய்
பற்றியபாசத்தில் பதறியமூந்திடாமல்
நித்தமுந்துணையாக நீவந்தருள்செய்வாய் (சுத்)

பாராதிதனிநிறைந்தாய், பரப்பிர்ம்ம
பாக்கியமே யெனையாள்வாய்
மாருகுமுலகத்தை பாராமலுனேநாடி
பேரான வெளியொளி நேராக்கண்டிடசெய்வாய்

அண்டசராசரமாய் நிறைந்தொளிர்
ஆதியே யெனையாள்வாய்
சண்டன்வந்தணுகாமல் பண்டுபவங்கள்போக்கி
தொண்டனிராமாநந்த சுதன்றனேகாத்தருள் (சுத்)

கீர்த்தனே முற்றிற்று.

---

கும்மி.

கும்மியடிபெண்கள் கும்மியடி குரு
பாதங்காணவே கும்மியடி
நம்மையாளும் விநாயகர்பாதத்தை
நாடிகும்மியடியுங்கடி—அருள்
தேடி கும்மியடியுங்கடி (கும்)

மேலைபுஞ்சையெனு மாநகரந்தனில்
மேவுங்கணபதியைப்பாட
சீலமிகுமவர்பாதமே காப்பெனச்
சிந்தித்துக் கும்மியடியுங்கடி—மிக
வந்தித்துக் கும்மியடியுங்கடி (கும்

1. மாலயனுங்காணு சோணகிரிக்குநேர்
வருணதிக்கினில் மேலைப்புஞ்சை
கோலமாநகர் வாழ்குஞ்சரமூர்த்தியை
கோரிக் கும்மி யடியுங்கடிப்—புக
ழூறிக்கும்மி யடியுங்கடி (கும்)

2. நாலுபக்கமுஞ் சோலைகளாமதில்
நடுவிநாயகன் சன்னிதியாம்
சாலவுங் குருவாழுமடாலய
சன்னிதியாமிதைப் பாருங்கடி—மிகு
உன்னதமாய்புகழ் கூறுங்கடி (கும்)

3. மகிமைசேர் மடந்தெற்கினில் தோற்றிடும்
மற்றுமோராலய மாமதிலே
சகமுழுதுந்துதி மாரியம்மன்வாழும்
சன்னிதியைவந்து கூடுங்கடி—வெகு
உன்னதமாய் புகழ்பாடுங்கடி (கும்)

4. ஊர்காக்குங்காளி சன்னிதி தொண்டனும்
உத்தமவேடியப்பன்கோயில்
பாரதின்பக்கத்தின் நாகப்பிரதிட்டை
பாங்காமரசடி பாருங்கடி—மிக
வோங்கியதன்புகழ்ப் பாடுங்கடி (கும்)

5. மகரதோரணம் மாவிலைதோரணம்
மாடமாளிகை வீதியினில்
சுகமுடனே யெங்குஞ் சூட்டுமாகோலத்தை
சுந்தரப்பெண்களா பாருங்கடி—மிகு
விந்தையாமிதனைப் பாடுங்கடி (கும்)

6. இருளைபோக்கிடுந் தீவட்டிமத்தாப்பு
ஏகமாங்குலோப்பு வால்லயிட்டு
அருக்கனைபோலொளி வீசிடுஞ்சோதியை
அன்புடன் பாடியடியுங்கடி—மிகுத்
தென்புடன் கூடியடியுங்கடி (கும்)

7. அன்னநடையுடையா யெழிற்பெண்களா
யானைமுகத்து விநாயகனை
நன்னயமாகவே பாடிடத்தேவனும்
நல்லருள்செய்திடுங் கோருங்கடி—மிகு
வல்லமையெய்திடும் பாருங்கடி (கும்)

8. மாமயில்சாயலைபோல் மடப்பெண்களா
மாமுக தேவன்றுதிபாட
காமக்குரோதங்கள் யாவுந்துலைந்து நற்
காட்சியு மோட்சமுந்தருவாண்டி—வருந்
தாட்சியெல்லாந் துலைத்திடுவாண்டி (கும்)

9. கொங்கைகுலுங்கவே செங்கையதிரவே
கோலமாமேனி வியர்த்திலங்கச்
சங்கையில்லாமலே தந்திமுகன்றனைத்
தாங்கிக் கும்மியடியுங்கடி—மிக
வோங்கிக் கும்மியடியுங்கடி (கும்)

10. சித்திரவேல்விழி மாதர்களேயிந்தச்
செல்வகணபதி தன்னைநிதம்
பத்தியுடன்பதம் சேவித்திடநல்ல
பாக்கியங்கைகூடும் பாருங்கடி—வெகு
யோக்கியமா மென்றுத்தேருங்கடி (கும்)

11. மேட்டியாஞ்சைவ வேளாளமணியம்
மேவுஞ் சின்னத்தம்பியுடையாரும்
தாட்டிகமா முத்துச்சாமியுடையாரும்
தர்மகர்த்தாவென்று பாடுங்கடி—மிக
நன்மனத்தாரென்று கூறுங்கடி. (கும்)

12. விச்சுவபிராமண கருணீகர்வீதியும்
மேவிடும் வைசியர்யாதவரும்
எச்சமயத்தோரும் வாழ்ந்திடு மேன்மையை
யிசைத்துக் கும்மியடியுங்கடி—கை
யசைத்துக் கும்மியடியுங்கடி (கும்)

13. அங்கம்புளகிக்க யாவருங்கூடியே
ஆதிபரிருவர்கட்டளையால்
ஐங்கரதேவனும் வீதியிலே விளை
யாடிவருவதைப் பாருங்கடி—யாருங்
கூடியே கும்மியடியுங்கடி (கும்)

14. கோரும்வரங்களைத் தந்திடவே வல்ல
கோயில்கொண்டுள்ள நல்லமுத்து
மாரியம்மன் இந்தவீதிவலமாக
வாரதைபார்த்துமே வாழ்த்துங்கடி—யருள்
சேரவே சென்னியை தாழ்த்துங்கடி (கும்)

15. வீரசூரபராகிரமங் கொண்டு
மேவலர்யாரையுந் தானடக்கும்
ஆரவாரத்துடன் வேடியப்பன்வீதி
ஆர்த்துவருவதைப் பாருங்கடி—அவரைப்
பார்த்துக்கும்மியடியுங்கடி (கும்)

16. பேரிகைதம்பட்டை மேளவாத்தியங்கள்
பேரொலியெங்கு முழங்கிடவே
தாரைபூரிசின்னத் தோடுவெடிகளும்
தாக்குமுழக்கத்தைப் பாருங்கடி—சி
லாக்கியமிது வென்றுபாடுங்கடி (கும்)

17. மண்டலம்புகழு மடத்தில்குருபூசை
மாதந்தவருமல் செய்கிறதும்
தொண்டர்கள்யாவர்க்கு மன்னம்படைப்பதைத்
துதித்துக் கும்மியடியுங்கடி—மிக
மதித்துக் கும்மியடியுங்கடி (கும்)

18. சீர்மணியக்கார் தேவிமாரிருவர்
செய்யமுத்துச்சாமி தாயாரும்
பாரினில்தொண்டரை பார்த்துப்பணிசெய்யும்
பான்மையைக்கண்டுளந் தேருங்கடி—யிந்த
மான்மியத்தைக்கண்டு வாழுங்கடி (கும்)

19. காலையும் மாலையும் கண்ணுங்கருத்துமாய்
காய்கறியன்னம் சமைத்திடுவார்
சீலவன்பர்வரவில்லையே யென்று
தேடிடும்பான்மையை பாருங்கடி—தெரு
நாடியேநிற்பதைப் பாடுங்கடி (கும்)

20. அன்னநடையுடைச் சின்னம்மைகுணசாலி
ஆதிசிவகாமித்தாயரைப் போல்
அன்பனிராமாநந்தன் வரும்போதெல்லா
மன்னம்படைப்பதைப் பாருங்கடி—அதை
யென்னென்று சொல்லுவேன் கேளுங்கடி (கும்)

21. மங்களமாஞ் சித்திபுத்திவல்லபை
மாமுக வைங்கரன்றுள்வாழி
சிங்காரமாமேலை புஞ்சையில் வாழ்ந்திடும்
செல்வவடியவர்தாம் வாழி—சுக
மெல்லியர் யாவருந்தான் வாழி (கும்)

22. சிந்தையொடுராமாநந்தன் துதியிதைத்
தேடிப்படிப்பவரும் வாழி
அந்தமுளப் பெண்கள்யாவருங்கூடியே
ஆடியடிப்பவரும் வாழி—புகழ்
தேடிநடிப்பவரும் வாழி (கும்)

23. மேலைபுஞ்சை யெனுமூர்வாழி யதில்
மேவியிருப்பவரும் வாழி
சாலவேகற்புடையார் வாழி நிதம்
தாழ்ந்து கும்மியடியுங்கடி—மிக
வாழ்ந்து கும்மியடியுங்கடி. (கும்)

கும்மி முற்றிற்று.

---

௨

சிவமயம்.

# ஆயுர்வேத வைத்தியசாலை

# விளம்பரம்.

எமது நண்பர், பரம்பரை வைத்தியம் இரண்டேரிப்பட்டு நகர் ஜெயராவ் நைனார் என்பவர் திருவண்ணாமலை ஈசானிய மடாலயத்திலிருந்த ஸ்ரீலஸ்ரீ குமாரசாமி யென்னும் ஞானியரால் அனுக்கிரகம் பெற்று பற்பங்கள், செந்தூரங்கள், லேகியங்கள், மாத்திரைகள், எண்ணெய்கள் யூனானி முறைகளையுங்கொண்டு வெகுநாளாய் அனுபவ பிரசித்தமாய் வைத்தியஞ்செய்து வருகிறார். வியாதியஸ்தர்களுக்கு வெகு அனுகூலமாய் வருகிறது. இப்படிக்கு,

சின்னக்கண்ணனும்

**அருணாசல நாயனார்,**

கணிதசோதிடம், இரண்டேரிப்பட்டு

போளூர். P. O. (N. A. Dt

உ



ஓம் பரப்பிரம்மணே நம:

# இலட்சுமி விலாஸ அச்சுக்கூடம்,

## லாங்குபஜார், வேலூர்.

## அச்சுவேலை விளம்பரம்.

## அன்பிற் சிறந்த செந்தமிழ் செல்வர்காள்!

எமது அச்சுக்கூடத்தில் எவ்விதமான அச்சு வேலைகளையும் மிக சுத்தமாக குறித்த காலத்திற்குள் மிகக் குறைந்த கட்டணத்திற்குச் செய்து கொடுக்கப்படும். புத்தகம், கலியாணப்பத்திரிகை, விளம்பர நோட்டீசுகள், லெட்டர்பாரம், பில்புத்தகம், கணக்குப்புத்தகம் மற்றும் எந்த வேலைகளாயினும் செய்துகொடுக்கப்படும். ஒருதரம் தாங்கள் அச்சிடும்வேலையைக் கொடுத்துப் பார்த்தால் உண்மை விளங்கும் ஆதலால் அதிகமாக எழுதுவது மிகையாகும். அச்சிடுதற்குவேண்டிய கையெழுத்துக்காப்பியை முன்னதாக அனுப்பி கட்டணம் (சார்ஜு) முதலியவைகளைத் தெரிந்துக்கொள்க. பதில் வேண்டுவோர் ரிப்ளைகார்டு அனுப்பவும்.

இங்ஙனம்,

**ஆ. க. வெங்கடாசல நாயகர்,**

சொந்தக்காரர்.

இலட்சுமி விலாஸ அச்சுக்கூடம்,

லாங்குபஜார், வேலூர். (*N. A. Dist.*)